## 27-நட்சத்திரங்கம் அதற்காணும் சுரரேகசாந்தியும்.

### அசுவனிக்கு.

ஆவதோரசுவனியிலன்று இத்திடுஞ்சுரம்
போகும்பத்துநாளினிற் போகாவிடிலோர் சாந்திகேள்
ஈவதுநவதானியமிவன்றலையைச்சுற்றியே
கோவதற்குவைத்திடக் குணமதாங்கொடுஞ்சுரம். எஎச

### பரணிக்கு.

பரணியிற்சுரமுதிக்கப்பகருமைந்து நாளிலே
விரைவினில்விடாததாகி லெள்ளுஞ்சோறுஞ்சுற்றியே
நிரவியூரின்மேற்கினில் நிலைக்கநாலுசந்தியில்
பரவிவைத்திடவங்கேபரந்து போஞ்சுரமதே. எஎரு

### கிருத்திகைக்கு.

கிருத்திகையிற்றோன்றுகாச்சல் கேளிருபத்தோர்தினம்
பொருத்தமாகிநின்றுபோம் போகாவிடிலாநெய்யுஞ்சோர்
திருத்தமாகச்சுற்றியுநீ சேருமக்கினிமூலையில்
விருத்தமாகவைத்திடவிலகுமச்சுரமுமே. எஎசா

### ரோகணிக்குக்குணம்.

மந்தமாகும்வாய்பினற்றும் வாந்திசெய்திருமிடும்
சந்ததமலம்விடுஞ்சலமிறங்கும்போதினிற்
குந்திவாந்திசெய்யுந் தேகங்கொப்பளிக்குங்காய்ந்திடும்
தொந்தவாய்வும்பரியுமிக்ககுருண்டிடுஞ்சொரியுமே. எஎஎ

பார்க்கமார்வயற்றினிற்குப் பாரைபாச்சும்வாறுபோல்
சோக்கவும்பிடரிகண்ட முந்திமிர்களேறிடும்
ஏர்க்கவும்பதினொராநாளேகிடு மேகாவிடின்
தீர்க்கமாககூர்ரசாதம் சுற்றிவையூர்நடுவிலே. எஎஅ

### மிருகசீருடத்துக்கு.

மிருகசீருடச்சுரம் விலகுமார்நாளொன்பதில்
வெருவவுநிற்காவிடின் வெள்ளைபுஷ்பமைந்துமே
சிரசிடத்தில்சுற்றி மாலின்க்ஷேத்திரமுன்வைக்கவும்
மருவாரக்கடசியில் சுரமும்நோயுமேகுமே. எஎகூ

### திருவாதிரைக்கு.

ஆதிரையினிற்சுரமுமைந்து நாளையில்விடும்
வாதித்துவிடாதேல்மரண மிருபத்தைந்தினிலாகும்
வேதித்துப்புதன்வியாழம் வெள்ளிகாரியின்பகல்
ஓதியும்பரமானன்றம்சுற்றி கோயில்முன்வையே. எஅ0

புனர்பூசத்துக்கு.

புனர்பூசமுதித்தகாச்சல் போகுமேழுநாளல்லது
தனித்திருபத்தோருநாளிற் றான்விலகுமில்லையேல்
முனிந்துமேகாயமுஞ்சோறு முன்பெருமாட்கோயிலிற்
கனிந்துமேவைக்கச்சுரமுங் காணுதோடுங்காணுமே. ௭௮௧

பூசத்துக்கு

பூசத்திலுதித்திடும்புகல் சுரமபொல்லாங்கிலை
நேசமாயுதித்தபோதே நின்றிடும்நிஜமிதே
பாசத்திலுதித்ததற்குப் பச்சாந்தியில்லையே
தேசத்திலுதித்தநோய்க்குச் சேதமில்லைதீருமே. ௭௮௨

ஆயிலியத்துக்கு.

ஆயிலியமன்றுதித்த வச்சுரமடுத்தநாள்
போயிடும்போகாவிடில் போகுமூவார்நாளினில்
தீயநாகப்புத்திற்பாலும் தீபதூபமிட்டிடில்
நோயதுவகன்றிடு நுணுக்கமானநுட்பமே. ௭௮௩

மகத்துக்கு.

மகத்தினிலுதித்தவெப்பு மாறுமீரார்நாளினில்
அகத்தியம்விடாவிடின் ஆறுபத்துநாள்செலும்
சுகம்பலிக்குமெள்ளுசோறும் சுற்றிசுடலைவைத்திடில்
சகத்தினிலமுஞ்சுரமுந் தாண்டியோடுஞ்சண்ணியே. ௭௮௪

பூரத்துக்கு.

பூரத்திலுதித்தகாச்சல் போகும்பத்தோர்நாளினிற்
பாரத்தில்விடாவிடில் பருப்புஞ்சோறுஞ்சுற்றியே
கூரதைப்பிடாரிவாழும் கோயில்முன்றுவைத்திடில்
சீரதாய்ச்சுரமுந்தீர்ந்து செவ்வையாயிருப்பரே. ௭௮௫

உத்திரத்துக்கு.

உத்திரத்துதித்தவெப்பு வொன்பதாந்தினத்திலே
அத்திரம்விடாவிடி லதறகுத்தேனுஞ்சோறுமே
குத்திரமாய்ச்சுத்திவிண்டு கோயில்முன்னம்வைத்திட
பத்திரமாகச்சுரம் பறந்துபோகுப்பாரிலே. ௭௮௬

அத்தத்துக்கு.

அத்தத்திலுதித்தகாச்ச லகலுமேழுநாளினில்
முத்தத்தில்விடாததாகில் முறையாய்ப்பாலுஞ்சோறுமே
மொத்தத்திற்றலையைச்சுற்றி மூர்க்கதுர்க்கைக்கோயில்முன்
வைத்தசுரமுந்தீர்ந்து மாறியோடும்மெய்யமே. ௭௮௭

சித்திரைக்கு.

சித்திரைக்குறித்தசாச்சல் சேர்ந்தவெட்டுநாளினுள்
நித்திரைபோலேகுமே யோகாதிருக்கிலங்கனே
வத்திரஞ்சோறுங்கரியும் வைத்தவர்க்குசுற்றியே
சித்திரமிழைத்ததேவசன்னிதிமுன்வைத்திடே. எ௯௯

சுவாதிக்கு.

சுவாதியிலுதிசுரந்துலேயும் பத்துநாளையில்
அவாவதிற்றீராவிடிலதற்குச் சோரிலேக்கரி
நிவாசியப்புத்தலையைச்சுற்றி நேர்நிணஞ்சேர்காட்டினிற்
றிவாகரனெதிரில்வைக்கச்சென்றிடுஞ் சுரமதே. எ௯௬

விசாகத்துக்கு.

விசாகநாளெடுத்த சுரமேயிருபத்தொன்றினிற்
நிசாசரமதாயிருக்கில்நேரிரைச்சிச்சோறுமே
திசாதிசையின்புன்னைமரத்தின்கீழ்வைத்திட
நிசாநிசஞ்சுரமுந்தீர்ந்து ஓட்டியோடுங்காணவே. எ௬0

அநுஷத்துக்கு.

அனுடநாள்சுரங்கடோற்றிலதிலொருபயமில்லை
மனதிற்சேற்றாரதியொன்றுவைப்பதுவுமங்கில்லை
தனதுநாட்கெடுவதுவுஞ்சாற்று தற்குவொன்றிலை
இனமறிந்து அவுழ்தமியவேகிடும விளைவிலே. எ௬௧

கேட்டைக்கு.

கேட்டைசுரமெட்டிரண்டி கெட்டியாகவிட்டிடும்
பீட்டுமங்கள்செய்திருக்கில் மிக்கபாலுஞ்சோறுமே
தேட்டையாகக்கேசஞ் சுற்றித்தேடித்துர்க்கைக்கோயில்முன்
போட்டையாகிலச்சுரம்புலம்பியோடு மங்கனே. எ௬௨

மூலத்துக்கு.

மூலத்திற்சுரம்வருனேடிடும் பதினொன்றிற்
சீலமாய்விடும்விடாதேல் செல்லுமெட்டுமாதத்திற்
கோலமாய்ப்பயறுஞ்சோறு கொண்டுவைசமாதியில்
ஞாலத்திற்சுரமகன்று நாடாதோடுமங்கனே. எ௬௩

பூராடத்துக்கு.

பூராடத்துதித்தசுரம் போதமெட்டாநாளினில்
மாராட்டமாய்விடாவிடில் மாயனார்தன்கோயில்முன்
சீராட்டமிடப்பாரிசத்தினின்றுசொர்ணதானமும்
பாராட்டத்தர்மமளிகைப்பற்றறுஞ்சுரமதே. எ௬௪

உத்திராடத்துக்கு.

உத்திராடந்தன்னிலேயுதித்தசுரமங்ஙனே
நத்திரெண்டுநாளினிற்றணிந்திடுமதில்லையேல்
பத்திகொண்டுசாந்திசெய்யும் பாவனங்களில்லைகாண்
சித்தியான ஆவுடதத்திற்றீருஞ்சுரஞ்சீரிலே எகூரு

திருவோணத்துக்கு.

ஓணத்திற்சுரமூழுந்தோன்றிலொன்று மேபயமிலை
ஆணவமொடுங்கிநின்றகன்றிடுஞ்சுரங்களும்
தோணமேவேறோர்சாந்தியது சூட்டுதற்கிலாமலே
நாணமேவபகன்றது நடுக்கடலிற்புக்குமே. எகூசா

அவிடத்துக்கு.

அவிட்டநாளெடுத்தவெப்புவ கலும்பத்துநாளினிற்
றவிர்க்கவும்விடாவிடிற்றயிருஞ்சோறுஞ்சாற்றியே
குவியவுமறையோர்கைக்கொடுத்திடச்சுரமது
புவிகருளேவிலகியோடுமபொய்யலவீதுண்மையே. எகூஎ

சதையத்துக்கு.

சதையத்திற்சுரமுதிக்கத்தான்விடும்ரெட்டினில்
வதையவும்விடாததாகில் மரணமுமோராண்டினில்
உதையத்திற்பஞ்சவர்ணச்சோறுச்சித்தலைசுற்றியும்
இதையத்தேறற்றியந்தணர்க்கிடச்சுரமகலுமே. எகூஅ

பூரட்டாதிக்கு.

பூரட்டாதியிற்சுரமும் போகுமாறுநாளினில்
ஈரட்டாய்விடாவிடி லிரண்டதாரில்விட்டிடும்
ஓரட்டாய்ப்பாற்சோர்சுற்றி யொற்றைக்கொம்பன்கோயில்முன்
மாராட்டமில்லாது வைக்கவந்தசுரமாறுமே. எகூகூ

உத்திரட்டாதிக்கு.

உத்திரட்டாதியினிலுதித்த சுரமீரெட்டிற்
றத்திபோம்போகாவிடிற்றயிரும் சோறுஞ்சுற்றியே
வெற்றிசேரும் கோயில்முன்புவைத்தவர்திரும்புமுன்
மத்தியிற்சுரமதுவும் வாங்கிடுந்தீங்கில்லையே. அ00

ரேவதிக்கு.

ரேவதியுதித்தசுரநேரிலெட்டு நாளினிற்
போவதும்போகாவிடிற்புகழாய்ப்பால்சோர்சுற்றியே
போவதூநற்சித்திர மெழுதுமண்டபத்தினில்
ஆவதுமேல்வைத்திடவகலுஞ்சுரமன்றுளே. அ0க

சாதிலிங்கத்தின்குளிகை சாற்றவுமெளிதினில்
ஆதியந்தமாயனுபானத்தினைப்புகலவும்
சோதிக்கப்பலமுறைதொடர்ந்துசெய்யவல்லவர்
நீதியாகவேகளிக்க நேருரைத்தபாகமே. அ0௨

சஞ்சிதம்லவங்கம்லிங்கர்தாளிசபத்திரியும்
கொஞ்சியேசமனதாகக்கொள்ளவித்தநீரிலே
மிஞ்சரெண்டுசாமமாட்டிமேவுங்குன்றிவீதமாய்
அஞ்சிடாதுருண்டைசெய்தமைத்ததையெடுத்துமே. அ0௩

ஆனவேளைவேர்பிடியதின்மேற்பட்டைதட்டியுங்
காணப்பசும்பாலரைத்துக்கண்டரைத்துப்பாலில்சேர்
ஊனமறவாரமோருருண்டையங்கிசந்திக்குத்
தான்தரவறுத்தஉப்பு தாக்கவெள்ளைச்சாகுமே. அ0௪

பூனிலக்கடம்புபட்டைப் போட்டரைப்பலமதாய்
கானினிற்செருப்படைச்சார்கண்டரைத்துழக்கினில்
மேனிடவேழ்நாளுமேல்விசிறியேகுணமதாய்த்
தானிதில்வறுத்தவுப்பு தாக்கக்கிரையாகுமே. அ0௫

ஆகிடப்புளிப்புகையு மாகாப்புண்களாறிடும்
ஏகிடுநற்றேனினல்லதிரு பிச்சாற்றினிற்சுரம்
நேகத்திப்பிலிலவங்க நெல்லிவற்றல்சேர்ப்பொரி
பாகஞ்சூரணம்மதுவிற் பாச்சவிக்கல்மாறுமே. அ0௬

வட்டத்துத்திச்சாற்றிட மண்டலமோர்குளிகையைக்
கெட்டதேகந்தூலமாகும் கிளராவாரஞ்சாற்றினிற்
பட்டிடமும்மண்டலம் பசும்பொனிறமாகிடும்
தட்டவேசற்சிரகத்திற் றூபகரந்தீருமே. அ0௭

தீரவும்பழரசத்தில் சேர்த்துகுண்டையுள்ளமத்
தேறிடக்கடிவாயில் தீட்டிடவிஷமறும்
ஏறவுந்தேட்கொட்டுக்கும் வாயிலிட்டிடவுமட்டிடும்
கோறவிஞ்சிசாற்றிற் சன்னிகுளிர்சுரம்பறக்குமே. அ0அ

கார்திரிபலைதிரிகடுகு சூரணத்தினில்
ஓருருண்டைகோமயத்தி லுட்கொளவிஷபாகம்
பேருஞ்சூலைகாமாலையும் பித்தபாண்டுரோகமும்
பாருந்தேகமூறலும் பறந்திடுமனைத்துமே. அ0௯

உண்ணுமிழுநீரிலோ ருருண்டையுண்டச்சுனியம்
சண்ணுமபூதகரப்பான் பட்டைச்சாற்றிலண்டவாதமும்
பண்ணுமபுளியனிலைரசத்தில் பைத்தியசுரமறும்
எண்ணுமிஞ்சிச்சாறு தேனிலிடவுன்மத்தந்தீருமே. அகo

வெல்லத்தினிலோருருண்டை விழுங்கவேவியர்வைபோம்
நல்லவேளைச்சாற்றிலுண்ண நவிலுமதாபசுரமறும்
சல்லியமுத்தாமணியின் சாற்றில்மருந்திடருமம
மல்லுநொச்சிச்சாற்றில்தாக்க வாதசுரந்தீருமே. அகக

நெல்லித்தூள்மேதித்தயிரிலிடவயர்கடுப்பறும்
சொல்லவுங்கையான்ரசத்தில் கூட்டிருமலீளைபோம்
நல்லவேஷப்பாலிலே நவிலபிரமியங்கள்போம்
வல்லசாதிக்காய்ப்பொடியில் மாட்டக்கிராணிதீருமே. அகஉ

சாருவேளைச்சாற்றிலிடத் தவிரும்புறவாதமும்
நேரவெண்ணையிழைத்துத்தாக்க நீங்குங்கண்டமாலையும்
கோரமேனிச்சாற்றிலே குமுங்குமவிற்புருதியும
சோரசமதாகம்வசம் புத்தூளுஷ்ணவாய்வுபோம். அகங

எருவிலிச்சார்தன்னிலுண்ண நற்கரப்பான்கட்டியும்
பருகுஞ்சர்க்கரையில் பதினெட்டுநோய்கள்நஞ்சறும்
மருவும்பழச்சாற்றினில் மயக்கநஞ்சுசுழற்றலும்
உருகுநெய்யில்நேரிலேனு முட்கொளப்போமியாவுமே. அகச

தலைச்சன்பிள்ளைப்பாலிடக் கண்தன்னொளியின்பூவறும்
இலையரிசிகரியிலே முயலகன்றுபோகுமே
நிலைப்புளியம்பட்டைச்சாம்பல் நீர்தெளிவிருத்ததில்
பலிதமூவாருண்டையிற் பரங்கிப்புண்களாறுமே. அகரு

வெற்றிலையின்சாற்றிழைத்து விழியிலிடக்காசம்போம்
உற்றசாராயலது காடியூட்டிடச்சனியறும
நற்கழுதைமூத்திரத் தரைக்கண்ணிலிட்டிட
அற்றிடும்பசாசுபேயதிற்பிரமராட்சசே. அகசு

ஆப்பாலிலுரைத்தோருண்டை யாசனத்திற்கட்டிட
சாப்பாகவுடம்புகைகால் தன்செரிச்சல்மாறிடும்
காப்பாகத்தன்னெச்சலிற் கலந்தரைத்தைந்துண்டையை
தாப்பாயுள்ளங்காலிற்பூசத் தானேங்காதஞ்செல்வனே. அகஎ

அண்டமுள்ளேபூர வீரமும்மயஞ்சாம்மபின்
கொண்டரைத்துச்சம்பளச் சார்கூட்டியேரவியிட
விண்டிடமெழுகதாகும் வெண்ணெநெய்தேனிற்கொள்
கண்டிடும்பாரிசவாய்வு கண்டமாலையேகுமே. அ௧அ

கப்பலரிப்பட்டையோர் பலங்கொணர்ந்திடித்துமே
குப்பமேனிச்சார்மிதக்க ஊரவைபிரண்டுநாள்
வெப்பிலாநிழலுலர்த்தி மீண்டுமிவ்வார்செய்தபின்
தப்பிலாதுசூரணித்து தன்னிடைக்குசீனியே. அ௧௯

சீனிசேர்த்தோர்மண்டலஞ் சிறக்கவரைக்காற்பலம்
தானுண்ணவவரை முற்ப்பானகரிபூண்டுடன்
மீனுடன்காராமணி மிளிர்சுரைக்கரியாகா
ஆனதிற்றிமிரும்குஷ்டமகலும் ரிணமியாவுமே. அ௨௦

முன்பட்டையிருபல முதிர்வென்னிரிலேயரைத்து
தன்னேசீலேயிறபிழிந்திடுஞ் சலமுமோர்பலம்
அன்றருந்தவாநிரெண்டு பேதிநான்காவர்த்தியாம்
நின்றிடாததாகில்மோரும் சாதமுண்ணநிற்குமே. அ௨௧

நிற்கவிச்சாபத்தியத்தினீங்கிடும் விரணங்கள்
வாககமுன்பட்டைகஸ்தூரி மஞ்சள்கருஞ்சீரகம்
சொற்கரிசலத்தரைத்ததற் கழற்சியுலர்கையில்
மிக்கதண்டுயோனிரிணம் விலகிடும்விரைவிலே. அ௨௨

மண்ணிற்புநாகங்கொணர்ந்து வார்த்துமோரினில்விட
வண்ணதுமணக்கக்கிடுமதைப் பசும்பாலிலிட்
டெண்ணிடவெரித்து சிவப்பேறிடவெடுத்தெறிந்
துண்ணரைருபாயிடையு மோரைந்துநாளிட்டிடே. அ௨௩

நாளுஞ்செம்மண்பூமியுள்ளரசமாமாத்தடி
வாளும்பூமிநாகந்தன்னை வன்று செய்படைச்சொரி
மீளும்புண்புரைகிரந்திமிக்கவெடிசூலையும்
நீளுங்கையில்கால் ரிணங்கள்யாவும்போகுமுண்மையே. அ௨௪

லிங்கம்ரெண்டுசெந்தூரமிரண்டு விரம்நாபியும்
பொங்குவாளமும்வகைக்குப்போட்டோர்விராகனிடை
தங்கவிஞ்சிநொச்சிலித்தணிக்கருநொச்சிலிச்சார்
அங்குமுச்சாறுமுச்சாமமுமரைத்துலர்த்திடே. அ௨௫

உலர்த்தியேபொடித்துடண விடையாயுன்னச்சூலேயும்
விலர்த்தியாகுங்குன்மவாயுவும் யிட்டிடுஞ்சுரமதும்
நிலேத்திடச்சுத்தியுஞ்செய்து நேரளிக்கும்போதினில்
பலத்தமோயகன்றிடும்பின்னிச்சாபத்தியத்திலே. அ௨௬

கூட்டிலிங்கம்வீரம்சூரம்பூரம்வெயிலேச்சாற்றினிற்
றூட்டியாய்த்தனித்தனியரைத்துமுஞ்சுருக்கிட
பூட்டிடகற்கட்ட தாகும்பகலவிதற்கிடிலே
நாட்டிலுள்ளோர்கட்டதற்குநல்லகட்டதாகுமே. அ௨எ

மேலரிப்பலம்நாலதில் வெங்காயம்பலமிரண்டதாய்
தானரைத்தபின்விளக்கு எண்ணெய்விட்டுக்கிளரிபோ
ஊனமறமேலேகியஞ்செய்துன்னடிப்பக்கரூலேயும்
ஞானம்போமார் நோவுபித்தஞ்சோகைபலக்கட்டுமே. அ௨அ

பூவரசன்பட்டைகாயம் பூபலம்வகைக்குமே
தாவிபிருபதாய்கிழ லுலர்த்திச்சூரணித்ததில்
தாவவுஞ்சமன்வெள்ளைச்சாக்கரைசேர்த்தேதானமண்டலம்
ஈவதும்வெருகடித்துப்பிட்டுக்கொள்ளவேண்டுமே. அ௨௯

வேணடுந்தலைநயில நீக்கிமேமுழுகவும்
மீண்டுமிச்சாபத்திய மிருக்கமேசவுரனும்
தாண்டிடுங்கிரந்தியுந்தடிப்புக்குட்டமானதும்
நீண்டிருந்தநோயெலா நிமைகருமோபரக்குமே அ௩0

வெண்மிளகுடன்மிளகிலெங்கடக்கிராகாரமொன்
றண்ணளவுமொட்டுலுப்பைக்காக்புட்டிவெல்லமிரண்
டொன்னளவுதேன்பல மொன்றரையும்லேகியஞ்செய்
துண்ணவிடிச்சிதளந்தாகடமுக்குத்திரனுமே. அ௩௧

அரைப்பலம்பழயமிளகாயா மணக்கெண்ணெயில்
உரைக்கவும்விட்டு வறுத்ததூள்பனைவெல்லத்தினில்
விரைக்கவும்பாவாக்கி நெய்தேன்விட்டதைக்கிளரியும்
தரைக்குளேயோர்சுண்டையளவுண்சண்ணுமூலஷ்ண வாயுவே. ()

வீரம்பூரஞ்சூதங்கெந்தியுமிலிங்கமோரிடை
தூரமிளகைந்திடைக்கு சூரணங்களஞ்சியால்
சேரக்கண்டுபுட்டி வெல்லந்தேனிற்கத்கண்டிலிட்
தீரவும்பத்தியமின்றி செல்லும்வேணநோய்களே. அ௩௩

ஓரைக்கால்கெந்திகால் சூதமரைலிங்கமுக்கால்
கோரவெள்ளையொன்று கௌரிகூரொன்றேகால்வீரமும்
தாரமொன்றரையிடை தனித்தனியாய்ச்சேர்த்ததை
கோரச்சுத்தித்து மூலைப்பாலிலரையென்சாமமே. அருச

சாமமுமரைத்திடத்தளர் குழம்புமாகிடும்
நேமமாயனுபானத்திநெல் லிடையளித்திட
போமதிற்சீதளஞ்சன்னி போகாசுரம்வாய்வதும்
ஆமதில்மேகமுதலனந் நோயகலுமே. அருரு

மோரிலிட்டுலர்ந்தநாகமும்பலம்தொன்றுகால
நேரினில் முருங்கைவிரையும்பலமீரேழதாய்
பாரினிற்சாதிக்காய் நாற்பலங்குறித்தயிலமாய்
சேரிறக்கிக்கால்விரானிடை யீரைந்துநாளிலே. அருசா

இட்டிடவும் வெற்றிலையினிற்றடவியுண்டிட
கெட்டிடவுந்தாது விர்த்தி நேரிடவுமுண்டு காண்
பட்டிடுமெங்நோய்களும் பரந்திடுமெளிதினில்
கிட்டிடும்பலாபலன் கிரீடியாவரங்களே. அருஎ

வீரம்பலம் நாலரையுமேபசுமஞ்சட்கிழங்
கேரவும்பலமுமைந்திடித்தசாற்றரைத்துமே
கோரவுமகலிலிட்டுக்கொண்டு சீலை செய்ததை
பூரவும்பூமிமட்டம்புதைத்து மேல்மணலிட்டே. அருஅ

மணலுநால்விரற்கடைவதிற்கொட்டியுமூன்றெரு
தணலிடமுதற்புடந்தகித்ததையரைத்துமே
குணமுடன்சீலையுஞ்செய்து கூட்டிறுவெருவினில்
மணமுடன்மறுபுடத்தில் வாட்டியுமெடுத்திடே. அருக

எடுத்தபின்னெவ்வோரெருவுமேற்றிப்பதினோர்புடம்
விடுத்திடும்பின்முன்போற்றுமிமேலுமூன்றெருமுதல்
தொடுத்திடுமுன்போலரைத்துச் சூட்டும்புடம்பத்தது
அடுத்திருபத்தோர் புடமுமாகிலெள்ளளவுமே. அசo

எள்ளளவுதேனினெய்யி லிட்டிடவும்வேளைக்கு
துள்ளும்வாய்வெண்பத்து நாலுஞ்சோறுசுரமெட்டெட்டும்
கள்ளநோயெலாமறுங் காருமிச்சாபத்தியமாய்
உள்ளதுமூன்றைந்துநாளு முட்கொளுமேலைக்குமே. அசக

மேலுமப்பளாகாரம் விராகனிடையொன்றனை
நாலுபடிநற்சலத்தில் நாட்டித்தூள்சுழூரத்துமப்
பாலுந்தீபாக்கினியாகப் பார்த்தெரித்தொருப்படி
கோலவுட்பிராந்திவர்ணங் கூடப்புட்டியிட்டிடே. அ௬௨

இட்டிடவிந்துட்டிடை யினைதக்குடிக்கவேழிநாள்
தொட்டிடவுமபித்தமாகிற் சூட்டும்பழச்சாற்றினில்
விட்டிடுமார்நோயதும் விலகுங்குன்மமெட்டதும்
அட்டியொன்றிலாமலே யகலுங்காதமங்ஙனே. அ௬௩

பச்சையாம்பசும்மஞ்சட்கிழங்கின் சார்படியொன்றில்
மிசச்மாமணக்கெண்ணை யரைப்புட்டியுட்காசசிட
அச்சம்பொன்வருணமாம் அதையெடுத்துக்காசிடை
சொச்சமாய்க்குடிக்கவாய்வு தூறியுபரக்குமே. அ௬௪

செங்கல்லிற்சிட்டக்கல்லைச் சிறுதுண்டதாய்நொறுக்கியே
பொருந்கவுஞ்சிறுவர்நீரினிற்போட்டு ஊரப்பின்பொடித்து
மங்ககந்தகத்திராவகத்திலேயரைத்தனை
அங்குபில்லைசெய்துயெருஞ்டிம்பதில்புடமிடே. அ௬௫

வெள்ளியையுருக்கி மூவிசைமொகடம்பூரசத்
துள்ளதைத்தோய்வெட்டையாகுஞ் சூட்டுங்கிஞ்சம்பொட்டிலுப்
புள்ளநிட்டுமுன்னரச மூட்டியரைத்துப்புடம்
மெள்ளப்போட்டிடவெளுப்பாம் வேணநோய்க்கிட்டிடவே. அ௬௬

புத்துமண்ணுடன் கருவூமத்தன்பத்திரியரைத்
துத்தமோர்குகைபண்ணியு மூற்றியிரசத்தினை
வைத்துவாயைமூடிச் சீலைமண்ணதுசெலுத்தியும்
ஓத்தைசட்டியினிலும் பின்குகையிலேற்றிடே. அ௬௭

ஏற்றியும்வாய்மூடிச்சீலையெய்து நாற்சாமவனைச
சாற்றிடும வேலன்விறகலதிலுப்பைவிறகில்
தூற்றியுமெரிக்கப்பதங்கித்திடுமேற்சட்டியில்
ஆற்றியங்குடைந்ததிலமைந்ததையெடுத்திடே. அ௬௮

எடுத்ததையோர்புடியிவினிலேற்றிவாய் கார்க்கிட்டுமே
தொடுத்திடவரிசிடையைச்சூட்டுங்தேனுநெய்யினில்
இடுத்திடவெள்ளைச்சுருக்கு மாறும்பிடையும்ரிணம்
விடுத்திடுமேகமுதலிருபத்தொன்றுமேகுமே. அ௬௯

செம்பினிற்களிம்பலது செங்கால்பச்சையும்வெள்ளை
வெம்பிடவிமைத்துரிண மேற்றடவமாறிடும்
நம்பிடப்புடைரிணத்தில்நாட்டநீர்வாட்டிடும்
அம்புவியிலிவ்வெண்ணையினற்புதங்காணேரிலே. ஆ௫௦

கெந்திசுத்தியும்விளக்கெண்ணையினிலுருக்கியே
வெந்திடத்தணணீரிற்சாய்த்த தோர்விராகனுமிடை
தொந்தமாய்ச்சுண்ணத்திற்றூரஞ் சுத்திசெய்ததுஞ்சமன்
சிந்திக்கவிரண்டுமிருதேங்காய்ப்பாலிற்சேர்த்திடே. ஆ௫௧

சேர்த்தரைத்தப்பாலினிலிதைக்கலக்கிக்காச்சியும்
பார்த்தெரித்தவ் வெண்ணையைப்பார்த்திருத்துள்வெண்டலை
ஆர்த்திடலேகியஞ்செய்ததைச்சுண்டையளவதாய்
கோர்த்திடவந்திசந்திகொடுக்கமூன்றுநாளுமே. ஆ௫௨

கொடுத்திடவெண்ணையைச்சிரங்குத்திப்பூசியத்தினம்
விடுத்திலுப்பையுண்ணாக்கை மேற்றேய்த்து மூழ்கநீரினில்
அடித்துமூணுட்காலேமோர் சோறன்றிராநெய்சோறுண்ண
தொடுத்திடப்பத்தியமேகஞ்சூழ்கரப்பானேகுமே. ஆ௫௩

வெள்ளைப்பூலாப்பட்டையுந்தன்மேற்கொழுந்துசீரகம்
கொள்ளவாமணக்கெண்ணையுங்கூட்டியங்கெரித்ததை
பிள்ளைகள்தங்கட்கிடவும் போகுமந்திவெட்டையும்
உள்ளநோயனைத்தும்போமுடம்புபுஷ்டியாகுமே. ஆ௫௪

பூண்டுமுத்திரியுடன்பொரிச்சல் மிளகின்வீதம்
மீண்டுமோமமங்காசிடையாய் விண்டரைத்துமுண்டிட
தூண்டுமிளகினீர்சாதஞ்சூட்டக்காப்பிரொட்டியும்
நீண்டுபேதிநிற்காதாகினெய்யதனிலேற்றிடே. ஆ௫௫

ஏற்றவுட்டணத்தின்பேரிலேங்கப்பேதியாகிடின்
மாற்றச்சுக்குவோமங்காயம வாழைப்பட்டைச்சாற்றரைத்
தூற்றரெண்டுருண்டைவைத்துரைத்திடவுமக்கணம
போற்றவுஞ்சலாமுஞ்செய்து போகுமுஷ்ணபேதியே. ஆ௫௬

உண்ணப்பாலர்க்குப்பேதியுண்டாகில்முலைப்பாலரைத்
தண்ணதைக்கொடுத்திடவகலும் பேதியானது
சென்னதுமந்தத்திற்பேதி செல்லமுலைப்பாலிட
வண்ணவோமமாத்திரையரைத்திட்டுப்புளித்தண்ணே. ஆ௫௭

அரைத்திடோர்பணவிடைச் சீனிகற்கண்டிவ்வெண்ணெயில்
உரைத்திடத்திரிகடுகிற் றேனிலோர்விராகனிடை
விரைத்திடச்சுண்டைவிதத்தில் மேவும்வாய்வகன்றிடும
முரைத்திடுநோய்க்கைந்திரைந்து மூவைந்துநாள்மூட்டுமே. அசுசு

மூட்டிடச்சகலமேகமும் வாய்வுகிரந்தியும்
மாட்டிடச்சர்வசுரஞ்சூலைகள் குன்மம்வாய்வதும்
திட்டிடவுண்ணுக்கைத்தின்னுந் தியநோய்திரட்சியும்
வாட்டிடுங்கைகால்பிடிப் பிடிமார்நோய்குடைச்சலே. அசுஎ

குடைச்சலிற்கிச்சாபத்தியங் கூடாதுபுளிப்புகை
இடைச்சதுமூருங்கைப்பிக்கன் கேளவரைவண்டையும்
இடைச்சல்சிறுமுள்ளிக்கீரை கடுகுபூண்டிரைச்சியும்
அடைச்சிநீக்குமுறிவுவெண் மிளகுசிறுகீரையே. அசுஅ

மிளகுகியாழம்வைத்துண்ணவு மோமங்தேய்த்துமூழ்கவும்
விளக்கெண்ணெநல்லெண்ணெயில் மூன்றுதலைமுழுகும்பின்
புளகிக்கச்சீயக்காயரைப்புடன் மூழ்வெணெணெயிலும
வளப்பமாய்க்கூட்டித்தலைக்கு வார்த்துப்பும்புளிசேரே. அசுகூ

காட்டுக்கெந்தியைப்பொடி தலையரைத்துள்வைத்ததை
விரட்டியைந்தினிற்புடமிடப் பஸ்மமமாநெய்யிலெலி
திரட்டியுணமேகப்படை தினைதவளைச்சொரியூரல்
மிரட்டிடவின்னும்பலது மேகும்வெகுதூரமே. அஎ0

சிந்திற்கொடியின்சூரணஞ் சேரவைந்ததுபலம்
ஏந்துமோமமுமதுர மேலங்கிராம்புகோட்டமும்
மீந்தசாதிக்காசாபத்திரி விடையங்கிராம்பதும
காந்தமாமுத்தக்காசு கன்னரிவசுவாகியே. அஎக

வாசிசந்தனஞ்சீரக மாவாரையிலுப்பைப்பூ
மாசறுகோரோசினை வகைக்கிருவிராகனிடை
வீசுசர்க்கரைப்பல மிரண்டுதேனுமோர்பலம்
கேசமாய்ச்சூரணமல்லது லேகியஞ்செய்திடே, அஎஉ

இட்டிடச்சகலகழிச்சல் மேகம்பிரமியங்
கட்டிடுந்தலைபிடிக்கை காலெரிவுபீநசம்
கெட்டிடாதுகீரிழிவு நீர்கடுப்புநீரடைப்
பொட்டிடாதுவுள்ளுருக்கி போகும்பலநோய்களே. அஎஙு

தட்டிப்பூரம்வாழைப்பட்டைச் சாற்றைத்தோட்டிட்டதை
ரொட்டிதிருப்பிஞற்போற்றிருப்பி யேழ்வினையரைத்
தெட்டியேழ்திரஞ் சுட்டுத்திரிகடுகுச்சூரணத்
தொட்டியேயரிசியடையுண்ணப் போம்வினைகளே. அ...

கெந்தகத்திராவகமிருபலம் வெண்கோப்பையில்
அந்தமாகவிட்டிலிங்கமையம் வைத்துச்சட்டியில்
குந்திடவுங்கோப்பைவைத்துக் கோப்பைவாலச்சரிமணல்
சிந்திடாதுகொட்டிவைத்துத் தீயெரியடுப்பிலே. அ...

தீயதிற்றிராவகந்தீஞ்சிக்கொஞ்சமிருக்கையில்
ஆயதிலிங்கம்பூர்த்ததில்வரும் போதிறக்கியும்
சாயவுமாறியதின்பின் றணணீரினையூறறிடின்
பாயவுமெல்லாமடியிற் பற்றிநிற்குங்காணவே. அ...

காணவேகலக்கிக்கலக்கத்தண்ணீரிருத்தபின்
ஈணவுமிவ்வாறுநாலெந்தேதிநற்தண்ணீரைவிட்
டோணவுங்கழுவியூற்றியுள்ளபடிவைத்திட
தோணவேகாய்ந்தது துல்லியபஸ்பமீநாதுமே. அளஎ

படிகியுமிரண்டுப்லம்பாச்சுந்தாரமோர்பலம்
பொடியதாய்க்கலியாணப்பூசுணைச்சாற்றிருசாமத்
திடமுடனரைத்துப்பில்லை செய்துலாத்தியீரெரு
புடமிடத்தாளகபஸ்மப் போக்குவின்மையாகுமே அள...

கெந்திதாளகமவனகக்கிருவிரா கனைதில்
முந்தியுமெருக்கம்பாலொருதுலாமும்விட்டதில்
பந்திக்கத்தேயகாயிரண்டின்பாலினிலரைத்தபின்
சந்திக்கக்கலந்தரைத்தரைத்ததைக்காச்சியிறக்கிடே. அ...

இறக்கியும் பெரியவர்கட்கித்தயிலமுத்துளி
உரைக்கவுங்சிசிநீரினிலுட்குடிக்கப்பேதியாம்
ஒருதுளிசிறியவர்கட்குள்ளளிக்க நாற்றிற
முரியது நற்பேதியாமுறிப்புமோருஞ்சோறுண்ணே. அ...

உண்ணவுங்கிரந்திசிரங்குச்சொரிகுட்டமும்போல்
கண்ணவும்வாய்வுமேகங்கரப்பான்காயங்காங்கைகட்
கெண்ணேயுண்டுமூன்றுநாளிச்சாபத்தியம்வைத்திட
வண்ணமாய்ப்பலவினைகள் வாடிவளமேமிதே. அ...

[illegible]மத்தைச்செடியைச்சூரியனுதிக்குமுன்னேபோய்
நாமத்தைக்கெல்லிப்பிடுங்கிரண்டதாய்ப்பிளந்ததை
வாமத்தில்வெயிலிற்போடவாடவாடவற்றிடும்
நேமத்தோடணையாப்பது நெட்டிடாதுநீங்குமே. ௮௮௨

நீங்குந்தோன்றுமூன்றுநாளிற்குள்செய்பலித்திடும்
ஆங்கரையாப்புத்தோன்று நாளுமுத்தற்பூநாகத்தை
பாங்கதாயரைத்து மூளுட்பற்றுபோடவீக்கமும்
ஓங்கிடாதனைத்துமாறியுள்ளநோயொளிக்குமே. ௮௮௩

வாட்டியவர்க்கன்பருப்பச்சார்சித்தாமணக்கெண்ணெ
கூட்டித்திரிபுரபதங்கங்கொடுக்கவேளையொன்
றாட்டிடவகன்றிடும் பதங்கமூமில்லாவிடின்
நாட்டிமூவேளைக்கொடுக்கநல்வாய் கோணல்மாறுமே. ௮௮௪

புங்கம்வேர்கரடித்தோல்புலித்தோலு பரிக்கரி
பொங்குநல்லெண்ணெயிற்சேரல்போட்டெரித்திறக்கியே
தங்க மூவேளைப்புகட்டச்சாருங்கக்குவாறுமே
மங்கவெங்குநில்லாது வனமலையிற்செல்லுமே. ௮௮௫

சியக்காயுழக்குச்சட்டியிலிட்டுத்தண்ணீர்படி
காயவிட்டுமெட்டிலொன்றாய்க்காச்சியுட்கொடுத்திட
நேயமானமாதர்கட்குநின்றிடுஞ்சூதகவாய்
வோயவிப்படிமூன்றுநாளுட்கொடுக்கட்[illegible]ருமே. ௮௮௬

சோத்தவித்தசாதிக்காய் மூன்றுபூரம்விராகனிடை
வார்த்துமுப்பலஞ்சித்தாமணக்கெண்ணெயி[illegible]
நாத்தவுங்கலக்கிக்கரண்டி வீதமைநாளது
நீத்தவயர்கொட்டலுக்குண்ணிச்சாபத்தியத்தி[illegible] ௮௮௭

ஆரஞ்சிப்பழத்தின்சரபத்திற் கரித்தூள்சமன்
ஓரவுண்சுலேகியஞ்செய்தொன்று சேர்த்ததை
நேரவுமேடக்கரண்டிரெண்டுமணிக்கோதிறஞ்
சோவுண்ணவாயினாற்றஞ் சென்றிடுமணக்குமே. ௮௮௮

அங்கிடுங்கன்றியிப்பவுரிச்சாற்றரைத்ததைத்
தங்கிடச்சிமிளிலிட்டிராத்திரி நித்திரையிற்
போகிடவாரமூதட்டிற்பூசவெள்ளையானது
நங்கிடக்கறுப்புமாகுநல்லுதட்டிற்காணுமே. ௮௮௯

எள்ளெண்ணெயனையணுவிசையவெள்ளெருக்கன்பால்
கொள்ளும்புட்டிதன்னில்விட்டு கோர்றமஞ்சள்தூள்பலம்
மெள்ளவுங்கலக்கிவெய்யலில்வைக்குந்தயிலத்தில்
தெள்ளக்கைகாற்றேப்குடைச்சற்றீரத்தியிற்காச்சிடே. அகூ0

ஈரமாய்வெங்காயநற்புளி கருப்பங்கட்டியும்
சீரகங்கோவையிலையைச்சேர்த்தாமணக்கெண்ணெயில்
நேரவேதடவித்தீபந்தேறக்காச்சியைந்தையுந்
சேரவுஞ்சுட்டேவரைத்துத்தீநீரிற்குழப்பிடே. அகூக

குழப்பியதனைமூன்றுநாட்கொடுக்கவாக்கினையாம்
பழக்கமாய்த்துவரையிற்பருப்பாம்பச்சைப்பயறதும்
புழக்கமாகச்சேர்க்கவும் புளிப்புமாகாபத்தியம்
சழக்கறவரய்ப்புண்ணட்சரந்தண்காச்சலகலுமே. அகூஉ

காயஞ்சீரகமுமோமங்கடுகிந்துப்புத்திரிகடு
நேயமாய்ப்பசும்பாலுந்தைவேளைச்சார்கடைமருந்
தோயவுமிடித்துப்பால்சற்றுட்பதமாய்லேகியம்
பாயக்காச்சிப்பாகதாய்ப்பகுகவிருநேரமே. அகூங

ராமலட்மணென்றதும்பொய் ராமனுமமந்திரம்பொய்
நாமரூபபேதமானநூலுடத்து தேவரும்பொய்
காமனும்பொய்விமனும்பொய் கருவியுங்கரணமும்பொய்
சோமசூர்யரன்றிமற்ற சொற்பொருட்கள்பொய்யதே. அகூச

கண்கடந்தவத்துவும்பொய் கண்டதும்பொய்விண்டதும்பொய்
எண்கடந்தமந்திரங்களேந்திரங் களானதும்பொய்
விண்கடந்ததேவரும்பொய் வேதனும்பொய்மாலவன்பொய்
பண்கடந்துநின்றமெய்ப் பராபரமதொன்றதே. அகூரு

நட்டுவைத்ததேவரும்பொய் நான்மறைகளானதும்பொய்
கட்டிவைத்தபுத்தகக்கதைகளும் புராணமும்பொய்
எட்டுதிக்குதேவரும்பொய் ஏழிரண்டுலோகமும்பொய்
மட்டிலாதஜோதிநம் மனத்துளேவிளங்குமே. அகூசா

மூலமந்த்ரமென்றதும்பொய் மூவரும்பொய்ஐவரும்பொய்
ஞாலமென்றுவாழ்வதும்பொய் நாலுவேதமானதும்பொய்
காலனென்றயேமனும்பொய் காலரிந்துகாலைநோக்கி
மேலுலகஞ்சென்றவர்க்கு வேறுதெய்வமில்லையே. அகூஎ

அண்டமும்பொய் அண்டமுள்ளடங்கலும்பொய்யானதால்
மண்டலம்பொய் மண்டலமதுக்களும்பொய்மற்றுள
தெண்டிரைக்கடல்களும்பொய் தேவரும்பொய்யாவரும்பொய்
கண்டமொன்றுளே கருப்பதானதொன்றுமெய்யதே. ௮௯௮

சாவதென்றுசொல்வதும்பொய் சாவதும்பொய்சர்வமும்
ஆவதென்றுசொல்வதும்பொய் ஆவதும்அழிவதும்பொய்
காவலிட்டமேலைவாசல் கால்கடந்தஞானிகட்கு
ஆவியில்லருமீசனன்றி யாருமில்லைமெய்யதே. ௮௯௯

பொய்யெலாந்திரண்டிருண்ட பொய்யெடுத்தபொய்யர்கள்
மெய்யலாதபொய்யிதனை மெய்யதென்பதேதுகாண்
மெய்யிலேயிருந்துதித்த மெய்க்கருணைபெற்றிடில்
பொய்யதென்றமெய்யுமிக்க மெய்யதாகுமெய்யிதே. ௯௦௦

அரியுமன்றயனுமன்று அரனுமன்றுவப்பரம்
கருமைசெம்மைவெண்மையென்ற கட்கடந்ததப்பரம்
பெரியதன்றுசிறியதன்று பேசுகின்றதாரமன்று
அரியமூன்றுகடந்து நின்ற ஜோதியோசிவாயமே. ௯௦௧

குண்டலங்கள்பூண்டுபெண் குளங்கிணற்றில்மூழ்கியென்
கண்டகோயிலெல்லாமிருந்து கைவணங்குதென்பயன்
பண்டுமிங்குமேயிருந்து பழுத்தவேடமாகொள்
மண்டுகங்கள்போலவே மனத்திருந்துமாசறுக்கிலீர். ௯௦௨

மணக்கமழ்ந்தபூவிராம் மலரதுபோதுதேனினை
வணங்குலாவுவண்டதாடி வந்துருந்தும்வாறுபோல்
மணங்குலாவுஜோதியை மணத்துளேயிருத்திடில்
பிணங்களாவதேதுநீர் பிழைத்திருக்கலாகுமே. ௯௦௩

சொல்லிருந்தகவில்லிலே சொல்லதன்முடிவிலே
அல்லிருந்தயிருளிலே அருக்கனோராசியிலே
புல்லிலேயெபுனலிலே பிறந்தபல்லுயிரிலே
எல்லையற்றயீசர்நோக்க மில்லதில்லையில்லையே. ௯௦௪

அஞ்செழுத்துமூன்றெழுத்து அச்சுபத்துஓரெழுத்து
மிஞ்சுமாறெழுத்தெனவழுத்துகின்றஎழுத்தர்காள்
அஞ்சுமூன்றுமாறுமன்ப தொன்றுமல்லவப்பொருள்
நெஞ்சடக்கபற்றிபேர்க்கு நிற்குமோசிவாயமே. ௯௦௫

த்தகத்திலேயிருந்த பொய்ப்பகட்டுஞானிகாள்
த்துவத்தைதேசிமிக்க நாவடங்கலுப்பதேன்
த்தகத்திலேயிருக்குஞ்ஜீவனைத் தெரிந்திடில்
த்தகத்திலேரிநாளும் மண்ணளவிருப்பரே. ௯0௬

ண்ணளவதானவண்ட மண்டலங்களொன்றிலொன்
றண்ணளவிலாதலோக மேழிரண்டுதன்னுளே
ண்ணளவிலேயிருந்து கண்கடந்தசோதியை
நன்னளவிலேயிருந்து வோய்ந்தருந்தஞானியே. ௯0௭

ஞானியென்றுவேடமிட்டு நாலுமூரைகற்றியே
ஊன்வளர்க்கலாய் மதத்துஉத்தளங்கள்பூசுவீர்
கான்றிரிந்தசேவுபோல காமமேகருதுவீர்
ஏனுமக்குஞானியென்று யாவரிட்டபேரதோ. ௯0௮

பெண்டுபிள்ளைசுற்றமற்றபேரெலாந்திருத்தியே
கொண்டுவாழுவின்றிநீருளத்தழுந்து மாடைபோல்
விண்டுரைக்கவாயிலாது வேட்டையாடுமூடனே
தொண்டர்வேடமிட்டது துடிக்கிலுந்துடிக்கலே. ௯0௯

மந்திரமுணர்ந்தாய் மதிமயக்கும்வேதியா
மந்திரங்குருகதும்பிறந்துதும்புரந்ததேயோ
அந்திரத்துவாயுவை அடைந்திருந்துஞானிமுன்
எந்திரப்பிலுக்கெலாம் பொழிதிலைத்தகோலமே. ௯௧0

கோலமிட்டுநீர்தெளித்து குட்டமுங்கலசமிட்டு
வாலைதொட்டுபூசை முன்வரந்தருங்குருக்களே
நாலையிட்டகும்பமும் நோக்கமிட்டதெய்வமும்
ஆலமிட்டகண்டர்முன்னடுக்குமோஉரைசெய்யே. ௯௧௧

அடுத்தடுத்துசென்று லாவுமம்பலத்துநாதனை
அடுத்தடுத்துசென்றுநீ யடக்குமாரடைக்கிடில்
எடுத்தெடுத்துசென்றுயிமை மிட்டெரித்தபேரெலாம்
உடுத்துஉண்டிருப்பரென்று உன்னுளேன்தெரிந்திலாய். ௯௧௨

பில்லைதட்டிசெம்பினைப் புடத்திலிட்டூதியே
மல்லுகட்டும்வாதிகாள் மனக்களங்கமற்றதோ
எல்லையற்றயீசனுறிருப்பிடமுணர்ந்திலோ
கல்லைசுட்டபோதிலுங் களங்கமற்றதங்கமாம். ௯௧௩

விட்டெரிந்தவித்திலே விளைந்தெழுந்தகோதையை
பட்டரிந்தமுன்னவர் பரித்தெரிந்தவாறுபோல்
கட்டரிந்துநித்தமுங்களை பிடுங்கவல்லரேல்
சுட்டெரிந்துபோவரோ சுடலையுமிருக்குமோ. ௬௧௪

ஆற்றிலேகுளித்தெழுந்து ஆகமங்களோதுவீர்
காற்றிலேகுரைந்திடுங்கணக்கரிந்துகொண்டிரோ
நாற்றிலேகளையெடுத்து நற்குடியாகாதநீர்
ஊற்றிலேமுணமுணக்கு முங்கள்மந்திரமேதடா. ௬௧௫

மூலவட்டமீதிலே முளைத்தெழுந்தசோதியை
ஆலவட்டமிட்டலோ வமர்த்திவைக்கவேணுமாம்
கோலமிட்டகன்னிபோல் குறிப்பிலேயிருந்திடில்
மாலையிட்டபிள்ளைபோல் மனங்குளிர்ந்திருக்கலாம். ௬௧௬

ஆசனந்திருத்திமே லணிமணிதுலக்கியே
போசனத்திற்காய்பசட்டு பூசைசெய்யும்வேதியா
தாசனென்றுஉன்னைநாடித்தாள்பணிந்தபேர்க்கெலாம்
ஈசனிருப்பிடத்தையெங்க னென்றுரைப்பையோ. ௬௧௭

செம்பிலேகளிம்பெடுத்து சிமையாளவேன்னிநீர்
கும்பலாய்புடத்திலே குருடராவதென்பயன்
சம்புவையிறைஞ்சியுஞ்சவளையற்றபோதலோ
கம்பமும்பழுக்குமே கயிலையுந்திறக்குமே. ௬௧௮

மண்ணில்பெண்ணில் பொன்னிலுமயக்குமோகபாதகர்
பண்ணும்புண்ணியங்கள் பாபமெண்ணியுஞ்செய்வார்களோ
ஒண்ணிலுந்தன்கண்ணிலுநேருண்மையையறிகிலார்
சண்ணியுமெழுநரகிற்சண்டனூர்க்காளவரே. ௬௧௯

பாரதம்ராமாயணம் பாகவதஞ்சலக்கிரீடை
ஆரணப்புராணமது விக்கியானமுங்கைவல்லியம்
காரணம்விலாசம் நாடகமாடல்பாடல்களும்
தோரணையாய்ப்பார்க்கக்கேட்கச்சூழ்பவமொழியுமோ. ௬௨௦

கல்லுகட்டைச்சாணிமண்ணு காரயந்துராசெம்பில்
கொல்லன்வார்த்துருவமைத்த கோயிலுட்சிலைகளை
மல்லுகட்டாய்க்கட்டியு மகோத்சவஞ்செய்போதிலும்
இல்லையேகதிபெறவு மேமனுப்பிணங்களே. ௬௨௧

கஞ்சிகாளஹஸ்தியானைக்காவலு வண்ணாமலை
மிஞ்சிதில்லைக்காசியிராமேஸ்வரமதுரையும்
துஞ்சியாவுஞ்சுற்றித்தூரதூரமூழ்ந்திரிந்தபேர்
எஞ்சியகதிபெறவு மீசன்பதஞ்சேர்வரோ. ௯௨௨

கம்பைகொள்ளடங்காவேரிகங்கைதுங்கபத்திரா
நம்பிசிந்துசரஸ்வதியுநர்மதாகோதாவரி
சம்புத்தீவுளநதி சகலதீர்த்தமாடினும்
எம்பிரானருள்பெறவிணையடிக்காளாவரோ. ௯௨௩

முப்புரமெரியீசனை முன்னொழாதமூடரை
எப்பவும்வெங்கடேசனிறக்கப்பிச்சையெடுப்பித்
தொப்பத்தன்மலைவலஞ்செய்தொன்றுபாதிமொட்டையாய்த்
தப்பிக்கோல் குருவையீவன்றன்செருப்பாம்சாடியே. ௯௨௪

தம்மதத்தைவிட்டொரு தனிமதஞ்சேர்சண்டியை
எம்மதத்தவரிகழவென்னலாபம் பெற்றனர்
அம்மதத்துமன்று கெட்டலைந்திழிந்தறிவிலா
சம்மதங்கொண்டோர்குரங்குதன்சேட்டைக்குள்ளாவரே. ௯௨௫

ஆரணிப்பெரியபாளையத்தமர்மாதிச்சியே
காரணியாய்வேப்பஞ்சேலை கட்டிக்கண்டதீபம்வை
கோரணிகள்செய்தெல்லோரும் கும்பிடமயேசனைப்
பூரணிமாந்தர்மானத்தைப்போக்கிப்பூசிப்பிப்பளே. ௯௨௬

உற்றநோய்ப்பிணிக்கெலாமங்குள்ளோர்கள்மயிரொரு
பெற்றபிள்ளையின்மயிர் பெருமாளுக்கீகிவது
நற்றவமியற்றொணாத நன்றிகெட்டநாதிகள்
சுற்றமாமனைவருந்தொல்லைபட்டுழல்வரே. ௯௨௭

இல்லல்லாமஹம்மது ரசூலல்லாவிஸ்லாமதம
அல்லல்லாவெனுந்துலுக்கரல்லாக்கைவிரலைந்தை
மல்லல்லாகொடுத்துஇந்து மதத்தர்கொண்டாடாவிடின்
சொல்லல்லாச்சுடுகாடாகிசுற்றிநாய்களோடுமே. ௯௨௮

ஆதிபாரதத்திற்பலராமர் துரியோதனர்க்
கோதிசுபத்திரையைத் தரக்கிருஷ்ணனருச்சுனர்க்
கேதிலீயவிருவ ரெதிர்த்தாழிக்கலப்பையை
வாதியாய்விடத்தசாவதாரமாயதூருரை. ௯௨௯

பார்க்கராமாயணத்திற் பரசுராமன்விஷ்ணுவாய்
திக்கராமன்வில்வளைத்த சேதிகண்டெதிர்த்தவன்
மூர்க்கராமாவென்றனுசை மூன்வளையென்றீந்திட
மார்க்கமாய்த்தசா வதாரமாயனென்றேசொல்லுமே. ௬௩௰

இங்கிதராமாயணம் பாரதமிரண்டிலுந்
தங்கியதசாவதாரச்சங்கற் பஞ்சொல்வல்லவர்
பொங்கதாயோர்பத்திலே இரண்டும்போகவிட்டலோ
நங்கதல்லவேயிதற்கென்னவிட்டுவீர்கள்பாட்டரே ௬௩௧

அன்னமென்னடைப்பாஞ்சாலி புள்ளிருக்கவிமனுஞ்
சன்னலைத்திறந்துவைக்கத் தாக்கியதாலவாயுவும
பின்னமுறவிவமோர்ஜுமாப்பிள்ளையென்றுரைப்பதற்
இன்னமென்சந்தேகமோ மெடுத்துரைப்பீர்கீங்களோ. ௬௩௨

மெய்யரிச்சந்திரன் சொத்துமேகோசிகர்கீந்தபின்
வையங்கணவ்வூரில்மீண்டும் வர்திடேனனென்றசொற்
பொய்யதாகத்தோட்டிசொற் புரண்டுவந்தூராண்டதால்
ஐயவனபகீர்த்தியடைந்த தோவசத்தியமே. ௬௩௩

சந்திரவதியின்சொற்றப்பா தெனமொழிந்தல் பொய்யென
வந்திக்கவரசனசேயை மாய்த்தவனெனென்றதால்
சிந்திக்காதுபொய்யுரைத்த செய்தியால்மெய்யாவளோ
முத்தியேவரசன்போல வோதலுமீதுண்மையோ. ௬௩௪

லோகிதாசன்பொய்யுரையினுட் பங்காணவுமறு
போகியாயசலாத்துப்பிள்ளை கருடன்சென்றுமே
வேகியாய்த்தாயையுங் கொய்துமீண்டுவருவேனெனச்
சோகியாய்விடந்தீண்டித் துடர்ந்துவாராதுண்மையோ. ௬௩௫

சத்தியகீர்த்தியெனுமந்திரி முன்னுரைத்தது
அத்தினமூவரைவிட்டகலே னென்றனுதினம்
பத்தியுமரசன்பின் பரிந்துபோனதாகையால்
புத்தியெங்கொளித்ததோசொல பொய்யுரையுமல்லவோ. ௬௩௬

குறிசொல்மேடைகத்திகட்டி கொண்டைகுச்சுஅங்கியோடு
நெறிமதுரைப்போலு டுத்திகெட்டிடுஞ்சாராயத்தால்
வெறிபிடித்துளருமந்த வீணரைப்பணிந்ததால்
மூறிப்பிறமக்குமோட்ச வீடடைவுசொல்வரோ. ௬௩௭

பக்கச்செடி லுச்சிச்செடிற் பற்றுந்திப்படுகளம்
முக்கியந்திருவிழாவை முற்றும்பூமூடர்காள்
எக்கலிக்கொட்டியுந்திரி யேவமமதியுள்ளவர்
மக்கியுமடிவரௌரவாதிநரகெய்வரே. ௯௩௮

ஏசுமதவாதிகளிறந்தபின்கடைசியிற்
பாசம்வைத்தொருமிக்கப் பலரையுமெழுப்பியே
நேசமுறப்பாபத்தை நிராகரித்துமோக்ஷத்தில்
வாசமிகவைக்கவேசர்வேசுவரனுமுண்மையோ. ௯௩௯

மண்ணினின்றன்சாயலாய் மனிதனைப்படைத்ததின்
எண்ணத்தாறசமுதாயினை யெந்தேவன்சிருஷ்டித்தார்
குணவாதாமெலும்பினைக் கொண்டேவாளினைப்படைத்
தண்மேணவுயிரேற்றியதிவ்வாறெனக்குரையுமே. ௯௪0

வள்ளுவாமனைவிபிராண வாதைப்பட்டாத்தயில்
உள்ளநீருமூசியுங்கூறிடிலுயிர் போமெனாச்
மெள்ளகொங்கணவன் கொக்கொக்கதையுரைக்கையில்
தெள்ளுமணியிசுபங்கையைத் தேவியநயாதமோ. ௯௪௧

தேவியாபி நப்பானாகிற் சேருமபோநோர்மைந்தரைக்
கூவியழுவுடைபெறுமோ கோதையருமக்கணாம்
பாவிக்கவாதிபகவன்பலமறியகிலாமுதேனா
சேயிகச்சிஷ்டியுமாறுவா தேவியென்பதெங்ஙனே. ௯௪௨

இன்றிறப்பிணத்தைத் பார்த்தினியிறக்கும்பிணம்
சென்றிருந்தாலினிருந் செளிக்குபோமறுபடி
என்றிறந்துமிறவாமலிருந்தும் பிறந்திடா
நன்றறஞ்செய்தார்களோ விநாட்டிலுளமைந்தரே. ௯௪௩

ஆக்கலுமழிந்தலுந்தன்னாலெனட்பிதற்றியே
போக்கிரித்தனங்கள்செய்யும பொல்லாததுன்மார்க்கர்கள்
மூர்க்கமாய்ச்சொன்னபடி முடியாவிடிலக்கணம்
சாக்கிரித்தனமாய்த்தெய்வ சங்கற்பமென்னுவரே. ௯௪௪

வரம்பெற்றபற்மாசூரன்ம யேசன்றலையிற்றொட
கரம்வைக்கவோடியயலேலக்கயொளித்ததுண்மையோ
உரங்கொளவிலிங்கப்பாவையுட் புகுந்தநாருரை
பரன்விஷ்வரூபமெடுக்கப் பற்றுமோனைசென்னிமேல் ௯௪௫

சீதையைப்பரிகொடுத்தச் சீராமன் இலங்கையில்
தீதுறக்குரங்கெழு பத்திரண்டுவெள்ளமும்
ஆதரவாய்க்கொண்டெதிர்த்தவன் கெலித்தலாண்மையோ
மாதினையழைத்துப்போய் வனம்விடுத்தல்மானமோ. சுசசு

மன்மதன்லட்சுமிமாயனார்க் குமைந்தனானகையால்
அன்னவன்சொர்க்கமத்தி பாதாளத்துண்மாதரை
முன்னவன்காமனாய்மோக மூட்டியும்புணர்ச்சிசெய்
தன்மையாற்றன்மாதுர்க்குத்தானுமாப்பிள்ளையலோ. சுசஎ

சத்தியமநுவிக்கியர்னந்தர்க்கநு சொற்றருமரும்
நித்தியப்பொருளதி நிபுணனென்றநீதனும்
அத்தினந்தன்னோடுபெண்டு தம்பிமார்களாரையும்
வைத்துசூதிலாடிதோர்க்க வெத்தருமஞ்சொலலுமோ. சுசஅ

முன்னம்பிரம்மகீதையு மொழியும்பகவத்கீதையும்
சொன்னகிருஷ்ணனியாவுந் தானென்றோதி பேடார்க்களத்தினில்
வன்னெஞ்சன்மடிக்கச்செய்த மாயவனோர்தெய்வமோ
இன்னமும்வியாசப்புரட்டியம்புதலநீதமே. சுசசு

நாரணனுலகமுண்டோ னாகிலேனோர்பாரதம்
காரணம்பஞ்சவரால் மூவாறக்குரோணிசேனையை
மாரணஞ்செய்தோன்றேவனோ மானிடன்கோபிகளைப்
பூரணமாய்க்கற்பழித்தோன் போக்கிரியுமல்லவோ. சுருo

சருவேசனைவேலங்காயிற் றானொளிக்கமாயனும்
உருவமோகினியாய் வந்தொன்றாகச்சேர்ந்தணைந்திட
பொருந்தவோரரியரப் புத்திரனுக்குதித்தலாற்
பெருந்தேவராநோடு வாண்பிணைந்ததுபெருமையோ சுருக

ஆதியந்தநாமரூப மாண்பெணற்றவத்தனைச்
சாதிவேடஞ்செய்கை கோலஞ்சாதனந்தமுதல்
ஓதிப்பிரசங்கிக்கவாணாற்ற நூற்புராணமாய்ப்
போதிக்கவுரைத்தியாவும் பொய்க்கதைப்புரட்டரோ. சுருஉ

ஊனதுவோர்கோயிலாயுயிரது வோர்வத்துவாய்
தானதுவோர்தம்பமாய்த் தவஞ்செய்வதோர்சத்தியாய்
கானதுவோர்காணியாய்க் காண்பதுவோர்காக்ஷியாய்
ஆனதுவோராக்ஷியாய் மாவதுவோர்சாக்ஷியே. சுருங

நூறுகாதயோசனை நொடிக்குளேபரக்குமுன்
னேறுமோர்பரியிற்சீனி இட்டஅங்குபடியும்வைத்து
தானுமண்டலங்கடந்து வப்பாலுமுப்பாழினிற்
சேறுடன்றங்கமும்முட்சாதிபோகமெய்துமே. ௯௫௪

மூச்சுக்காறுகாததூர முன்னடக்குந்தேசிமேற்
பாச்சலிட்டுமேறியங்கு பாரவனுஞ்சென்றதில்
ஓச்சமின்றிதங்கினானுமி யோகநித் திரைக்கொள
பேச்சதின்றிப் பிரமானந்தப் பேரின்பமடைவரே. ௯௫௫

சர்ச்சனரிடமிருந்து சந்ததமெஞ்ஞானியை
அர்ச்சனைபுரிந்தவரருள் விழிஞேக்கெய்திலார்
துர்ச்சனரிடமடுத்து தொல்லைபட்டுழன்றுமே
காச்சனைபுரிந்தவர் கலங்கியேநிற்பார்களே. ௯௫௬

கண்ணிற்காண்பதுவும் பொய்காதிற்கேட்பதும்பொய்
எண்ணிடுநினைவதும்பொய் யிச்சடலமானதும்பொய்
உண்ணிடுமுணவதும்பொய் யுற்றதுசொல்வதும்பொய்
மண்ணினிலிருப்பதும்பொய் வஸ்துவொன்றுமெய்யதே. ௯௫௭

பேராசையைப்பிடித்தவர்பிரம லோகமாளினுங்
காராகரசவாதமாங்கனகஞ் செய்யக்கோறுவர்
பூராகவஞ்ஞானத்திற் பொருளைத்தேடவல்லவர்க்
கோரணமெஞ்ஞானனு யோகக்கோரிங்கிட்டாததே. ௯௫௮

உற்றுப்பார்க்கவொன்றிலை யுறுதியாகாம்பவும்
சுற்றமுள்ளகற்பிதங்கள் சொல்லவும்பொய்யாகுமே
சற்று யோசிக்கின்சடநீஜகமெலாமு மித்தையாய்
அற்றிடும்போதல்லவோ யவையனைத்துந்தோன்றுமே. ௯௫௯

முப்புசத்தினையறிவர் மூதுணர்ந்தஞானிகள்
உப்புசத்தினையறிவ ருண்மைமேவுமியோகிகள்
அப்புசத்தினையறிவ ராத்துமக்கியானிகள்
வைப்புசத்தினையறிவர் வாதியும்வைத்தியரே. ௯௬0

காறுகாருயூத்திடக் கனகத்தையொக்காலுமே
நாறுநாறுகாலமாக நுட்பங்காணுவாதிகள்
வேறுவேறுநூல்களை விவேகிபோலுணர்ந்தெலாங்
காறுமாருய்க்செய்தவர் தனமெலாமொழிப்பரே. ௯௬௧

ஓங்கியும்பிரணவச் சொரூபியாயுதித்தவள்
தாங்கியும்வையமதனைத் தாயதாய்ரக்ஷிப்பவள்
ஏங்கியுமிருப்பவரையின்ப முறச்செய்குவள்
பாங்கியாய்ப்பக்கத்துணின்று பாதுகாத்திருப்பாளே. ௯௬௨

ஓரெழுத்தாய்மூலமா யுதித்திடும்பிரணவம்
ஆரணத்தில்முன்னும் பின்னு முச்சரிக்குமக்ஷரம்
பேரெழுத்தனைத்திலும் பிணைந்திருக்குமந்திரம்
கூரெழுத்திற்கோடியதிற் கூடிடுமெமந்திரமே. ௯௬௩

வாசியு முப்பூவது மனமது மூலப்புளி
நாசியு னுனிநடுவி னுட்டமு மறிந்திட
வீசியுங் குழலூதிமே லேறியங்கமர்ந்திடில்
ஊசிமுனைப் பேரொளியினுள்ள துநடனமே. ௯௬௪

லக்கமாயிரண்டுஆறு ஆண்டுகாத்துநாதனுல்
வாக்கும்மனங் காயமு மறந்துபவுன முற்றுமே
போக்குவருத் தானதொன்றைப் போதவு மடக்கியும்
சூக்குமதூலத்தைக்காண சூக்ஷுமமறிந்திடே. ௯௬௫

அறியவு மிருகலை யதனைமாற றிந்ம்விதி
குறியும்ரேசகப்பூரகக் கும்பமூன் றத்தினை
நெறியுடன் குருவுரைக்க நேர்மைகண் டனுதினம
வறியஅம்மென் றான்றிநங் பிங் வங்கென வகுத்திடே. ௯௬௬

வகுத்தோ துங்கை காலையு மடக்கியு முட்கார்ந்ததில்
தொகுத்துப்பின்னி யூதியுன்டுருத்தியுட்பொருத்தமாய்
பகுத்தவுண்ணுவைமடக்கிப் பகருநாசிபாதையில்
மிகுத்துவங்கலையடக்கி மேற்குமபித்தெழும்பிடே. ௯௬௭

கும்பித்தேஎழும்பிவிண்ணினில் கூர்ஹடயோகத்தினிற்
றம்பித்தேயிடைகலைபின் கலையிரண்டிர்தாக்கியே
வெம்பியும ரேசித்திழியலவ்வொருகடிகைமேல்
நம்பியுப்பயக்தியாய் நானிலத்திறங்குமே. ௯௬௮

முன்னமே வாசிவாலங் சிக்கென்ன மொழிந்ததை
தன்னிலேவா சிகுண்டலி தட்டியு மெழுப்பியே
இன்னமுங் கதும்பியே யகாரவீட் டிருத்தியும்
உன்னைகண்டுஉன் னுண்ணின்று ஊது அம்மகாரமே ௯௬௯

மகாரமுஞ்சிகாரம்வைத்து வாய்மடுத்துண்ணமுதமும்
பகாரமு மோங்காரமே சத்தாகுமட்ட மாசித்தி
அகாரமொன்றையறியதன்மே லானவைத்துவைத்தெரி
உகாரஞ்சச்சிதானந்தத்து உண்மைக்காணுமூதியே. ௬௭0

சுத்தனுகவாசியுன்னுட் சூட்சமாய்வசப்பட
நித்தமியோகத்தினின்று நேர்செலுத்தவல்லிரேல்
சித்தனுகநங்கென்றாதிச் சேரவும்பூரித்ததை
முத்தனுகப்பக்ஷமட்டுமே முன்மறவாதோதிடே. ௬௭௧

வாசியும்வசப்படவடிக கடிதிருட்பிட
நாசியைப்புரட்டிடா வடுநிலேதிகைத்திட
தேசியைவஞ்சிங்வுங்கென்று சேரக்கிழிறக்கிட
பேசியுமிடைகலையைப் பின்கலையில்விட்டிடே. ௬௭௨

விடுக்கவுமேமூன்றடி நடக்கையினுள்மாறிடும்
அடுக்கவுமேபூரகும்ப ரேசகித்துமிவ்விதம்
தொடுக்கவும்பத்தாவர்த்தி மாறுதியறவல்லவர்
நெடுக்கவும்யோகத்திருக்கு நேர்மையைக்கண்டோர்களே. ௬௭௩

ஆவதற்குண்மைஞானர் மறிவதற்கவன்கியானம்
மேவவுநிதந்தியானம் வீற்றிருக்கவுமோனம்
தேவதுயித்தாம்பிரமஞ் சிக்கிடவருந்தருமம்
பாவமும்விட்டோன்கர்மம் பகரொணுதுமர்மமே. ௬௭௪

மருமங்காண (அம்உம்ஓம்வயநமசி) யென்று நீ
புருவமையங்கண்ணிரண்டைப் பூட்டிப்பாரடுத்ததை
வெருவலுறங்க லசைதல்மேவல் சோம்பல்பாச்சலற்றுநீ
நிருவிகர்ப்பமாயிருந்து நேரிற்காணுமோனமே. ௬௭௫

மோனத்தினிற்பஞ்சவர்ண முற்றுநாதகீதமும்
தானத்தில்ரவிமதி சராசரம்வரைநதி
ஆனதிச்சுக்கிலசுரோணி தட்பேரிநின்முகம்
நானதுநீ சர்க்குருமீனற்றுரகந் தோன்றுமே. ௬௭௬

தோன்றுமாராதாரமுநேர் சூரியப்பிரகாசமும்
ஈன்றவாதிப்புருடன்வாக்கிய மத்துவிதப்பொருள்களும்
ஊன்றுங்குணக்குறிபுத்தி யுண்ணெறிவிளக்கொளி
போன்றும்பூதபவுஷ்ய வர்த்தமானமும்புகலுமே. ௬௭௭

புகலவுமுறுதிகொண்டு பூட்டியுஞ்சுழிமுனை
சகலவாணவந்துண்டாய்த் தரித்தாணந்தவாழ்வினிற்
பகலவன்போலேசொலித்துப் பாரில்விட்டகுறைதொட்டு
அலையுமூழ்வினையறுத்து வாக்கினையைநோக்குமே. கூஎஅ

நோக்கியும்பிரமஙீயாய் நுட்பங்காணத்தம்பதம்
ஆக்கியுமுத்திச்சதமா யகலவும்பொய்வாழ்வினைத்
தூக்கியும்வழிப்படச் சுழிமண்டல முங்கண்டு
போக்கியமும்முட்சாதியைப் பூணும்பதஞ்சேருமே. கூஎசு

நேரவுங்குருவினைத்தினந் தொழுதுபோற்றியும்
நேரவும்பிரமானந்த நிஷ்டையும்புரிந்திட
நேரவுமிருபிறவிச் சென்றிடவுனுதினங்
கோரவுமுத்தியைப்பெற கூர்வதுவுமுண்மையே. கூஅ0

ஆவதுமழிவதுமருள் வதும்பெறுவதும்
ஈவதுமிறப்பது மிசைவதுமெதிர்ப்பதும்
கோவதுங்குருவதுங் குணமதுங்குறியதும்
போவதும்வருவதும் புகலொணுப்பொருளிலே அஅக

வாதுகூறிதர்க்கர்பேசி வம்புசெய்யும்வீணர்கள்
போதுபோமளவுந்தாற் புத்தியினுல்வதறியும்
சேதுபரியந்தமோடித் தேசமெங்குஞ்சுற்றியும்
ஏதுவின்றியெம்பிரா ணிணைப்பதத்தைச்சேர்வரோ. கூஅஉ

கள்ளுடன்சாராயமுங்கஞ்சாவ பின்மதத்தையும்
தள்ளுபடியொன்றிலாது சந்ததங்குடித்துமே
சொன்னெழ வெறித்துவிழ்ந்து சுத்தஞானியானெனத்
துள்ளியுந்திரிபவர்கள் சோதியிற்கலப்பரோ கூஅங

எத்தொழிலைச்செய்திடினு மேதவத்தைப்பட்டினும்
முத்தரின்மனமதுவு மோனமேவிநின்றிடும்
கத்தபத்துக்கொத்திருக்குங் காரியமிலாதபேர்
நித்தமுமவதிபட்டு நீடுழிவதைவரே. கூஅச

பித்தர்போலும்பேயர்போல் பிசாசர்போலிருப்பருன்
மத்தர்போலிமிருப்பரங் கையமுதமும் புசுக்துண்பர்
செத்தர்போலுமிருப்பர் சிங்ணடிபோலுமிருப்பர்
சுத்தமூளஞானியர்கள் சொல்லப்பேரின்பத்திலே. கூஅரு

செங்கோலுஞ்செலுத்திநிதந் தேசமெங்குமாள்பவ்ர்
பங்கமாயரசைவிட்டுப் பார்வனங்கள்சுற்றியே
பொங்கமாயோகத்திருந்து பூசனைசெய்ஞானியர்
அங்கலிங்கபீடமாக வானந்தித்திருப்பரே. கூ௮௬

ஆனந்தத்தில்மூழ்கிபவனுபோகியன்னத்திற்கே
தானந்தேடியுண்பதிற்றத்தஞ் செய்வரன்றுட்டலன்
கானந்தனில்வேர்கிழங்கு காய்கனிசருகுமுண்
கூளமறப்பதவிசேர்ந் துய்வர்களெக்காலுமே. கூ௮௭

முத்திபெறவேண்டுமாகின் மோகத்தினைவிட்டிடு
சத்திபெறவேண்டுமாகின் தாரத்தினைவிட்டிடு
பத்திபெறவேண்டுமாகின் பாசத்தினைவிட்டிடு
சித்திபெறவேண்டுமாகின் செல்வத்தினைவிட்டிடே. கூ௮௮

ஆசையற்றுக்கானகிலனுதியா யநுதினம்
பாசமறறுயோகஞ்செய்து பக்திசெய்யவல்லிரேல்
நேசமுற்றுமாந்தருன்னைநிந்தமும் பணிபவும
பூசைபெற்றுமூழுட்சாதி யோகத்தையடைவரே. கூ௮௯

காயத்திரிமந்திரத்தைக்கைவிரலாலெண்ணியே
மாயத்திருட்டுருட்டுகள் வஞ்சனைசெய்பாதகர்
ஞாயமொன்றிருக்கவனி யாயத்திற்கலந்திட
சாயமெடுப்படைவது சங்கியங்கிருப்பரே. கூகூ0

சாமிப்பிறப்பித்தானே பூசாரிப்பிறப்பித்தானே
காமிப்பிறப்பித்தானேதகப்பன்பிறப்பித்தானே
தாமிப்பிறப்பித்தானே தனியாய்ப்பிறப்பித்தானே
சேமிப்பிறப்பித்தானை நிலையாய்ச்சொலுமிங்ஙனே கூகூக

மந்திரமெட்சணிசாலம் வசியமும்மருந்திடு
தந்திரங்கைமாற்றுவித்தைச் சாதனப்புமுக்கத்தோ
டெந்திரமேவல்மாரண மெதிரேற்றிவையெலாம
பந்தனமாகச்செயும பரமனெழுத்தொன்றிலே. கூகூ௨

எண்ணிலாதமாதர்கட்கு விந்தவர்காஷாயமும்
பண்ணியுமுபதேசம் பதங்காணுராசாரியாய்
அண்ணுடலுயிராவிமூன்றைத்தத்தஞ்செய்தீந்திட
குண்ணிடாதவர் சொத்தினைக்கோங்குவர்குருவாமோ. கூகூ௩

ஒன்றிரண்டுமூன்றுநான்குமைந்தாறு முகத்தரை
என்றுந்தெய்வமாக வெண்ணுமேழைமதியாளர்க்கு
ஒன்றிரண்டுமூன்றுநான்குமைந்தாறுமுகமிலா
தென்றும்வியாபித்தவன்றினகரனைப் போலுமே. ௧0௩0

எங்கள்தெய்வமுங்கள்தெய்வ மீதநிற்பெரிதெனச்
சங்கைகொள வைணவர் சைவர்தர்க்கமிட்டிட
தங்கவெச்சமயந்தோறுந்தானென்றுச்சொலிப்பவன்
பங்கயனரணன்காணுப்பரப்பிரம்மமாகுமே. ௧0௩௧

எச்சமயத்தேவர்கட்குமீசனொருவனலால்
மெச்சமயத்வெவர்க்குமெங்கெங்கும வெவ்வேறுதெய்வங்களோ
மிச்சவாடுமாடுமானைவெம்புலி குரங்குநாய்
வச்சகல்லுசாணிமண்ணுவாண்பெண்தெய்வமல்லவே. ௧0௩௨

கும்பிடுந்தெய்வமெலாங் குலத்தெய்வமாய்க்கோடித்தே
நம்பிநாளும்பூசைபொங்கல் நற்பலிகள்தந்திட
வெம்பிடவெதுமபிடபிடியதினலிபட
தெம்பிடக்குடிகெடுக்குந் செய்ததெய்வமாகுமே. ௧0௩௩

பேயுடன்பிசாசதும் பிரமராட்சசானதும்
தாயுடன்றக்கையுந் தண்ணீரில்மாண்டழிந்ததும்
நோயுடனெருங்கியுநொடியிலறத்தொழிந்ததுப்
நாயுடனெறும்புமெய்த்திறந்ததெய்வமீதலோ. ௧0௩௪

# சிவவாக்கியம் ஆயிரம்பாடல்

## முற்றிற்று.

